श्री:

योगसुधाकरो नाम

# योगसूत्रवृत्तिः

(द्राविडानुवाद विवरणोपेता)

யோகஸுதாகரம்

என்கிற

# யோகஸூத்ர வ்ருத்தி

(தமிழாக்கம், தமிழ் விரிவுரையுடன்)


தமிழாக்கம் விரிவுரை :

யோகி சுப்பராய சர்மா அவர்கள்


卐


வெளியிடுவோர் :

ஸ்ரீ எல். ராமய்யர்

காம்யகர்மம் விஹிதம் ஆதலால் **சுக்லம்** எனப்படுகிறது. நிஷித்தகர்மா **கிருஷ்ண** என்பது. மிச்ரம் **சுக்ல கிருஷ்ணம்** இரண்டும் சேர்ந்தது. இந்த மூன்றும் யோகி அல்லாத இதரர்களுக்கு உரியது. அது மூன்று வித ஜன்மம் தருகிறது. அதாவது சுபத்தால் (சுக்லத்தால்) தேவத்வம். நிஷித்தத்தால் (கிருஷ்ணன்) நரகம். இரண்டும் சேர்ந்தது (சுக்லகிருஷ்ணம்) மனுஷ்யத்வம் என்பது. யோகம் நிஷித்தம் அல்ல ஆகையால் அகிருஷ்ணம் என்றாலும், விஹிதத்தால் சுக்லம் என்று கூறலாமா என்றால் அப்படியல்ல-அகாம்யம் என்பதால் அசுக்ல கிருஷ்ணம் என்று சொல்லப்பட்டது (யோகம்). அது (யோகம்) சித்த சுத்தி விவேகக்யாதி துவாரா மோக்ஷமே பலம் என்பதால் யோகியின் கர்மம் அசுக்கில கிருஷ்ணம் என்று கருத்து.

अधुना प्रसङ्गाद्विपाकाशयाभिव्यक्तेः कर्माभिव्यक्तिनिदानत्वमभिधातुमाह—

இப்போது பிரஸங்கத்தில் விபாகம் (ஜாதி ஆயுர் போகம்) ஆசயம் (ஸம்ஸ்காரம்) வெளிப்படுதலுக்கு கர்மா வெளிப்படுதல் அனுஸரித்துள்ளதை விளக்கிக் கூறுகிறார்:

**ततस्तद्विपाकानुगुणानामेवाभिव्यक्तिर्वासनानाम् ।। ८ ।**

ततो यथोदीरितत्रिविधात्मककर्मणोरनन्तरं विपाकादीनायाभिव्यक्तौ सत्यां तद्विपाकानुगुणानामेव वासनानामभिव्यक्तिर्भवति, न विरुद्धानामित्यर्थः । देवत्वप्राप्तौ च चित्ते प्रसुप्ता एव नरभोगवासना भवन्ति, तासामभिव्यक्तौ दिव्यभोगायोगादिति भावः ।।

**ததஸ்தத் விபாகானுகுணானாமேவ அபிவ்யக்தி: வாசனானாம்** (சூ-8)

எப்படி முன்பு சொல்லப்பட்ட மூன்றுவித கர்மாவுக்கு பின்பு விபாகாதிகளின் வெளிப்படுதல் (தோன்றல்) இருப்பதால், அந்த விபாகாதி அனுகுணமாகவே வாசனைகளின் தோற்றம் உண்டாகிறது—அதற்கு விரோதமாக இருக்காது என்று அர்த்தம். தேவத்வ பிராப்தியின்போது சித்தத்தில் நரபோக வாசனை பிரஸுப்தமாக உண்டாகின்றன (இருக்கின்றன). அவை வ்யக்தமாக இருந்தால் திவ்ய போகம் உண்டாக முடியாது என்று கருத்து.



नन्वेता नरभोगवासना देवत्वादिजन्मसहस्रव्यवधानानन्तरं कथं तर्हि पुनर्नरजन्मन्यभिव्यज्यन्त इत्याशङ्क्याह—

சரி, இந்த நரபோக வாசனைகள் தேவத்வாதி ஜன்ம ஆயிரம் காலவ்யவதானத்துக்குப்பிறகு எப்படி மறுபடியும் நரஜன்மங்களில் பங்கு கொள்கிறது என்று சங்கித்துக் கூறுகிறார்:—

**जातिदेशकालव्यवहितानामप्यानन्तर्यं स्मृतिसंस्कारयोरेकरूपत्वात् ।। ९ ।।**

अनादौ संसारे येन कर्मणा यस्मिञ्जन्मनि भोगैः संचिता या वासनास्तासां जन्मकोटया स्वर्गादिदेशेन कल्पशतेन च व्यवहितानामपि तज्जातीयेन कर्मणा तस्मिञ्जन्मनि पुनः प्राप्ते सति तेनैव कर्मणा जन्मनामभिव्यक्तानामानन्तर्यं स्मृतिद्वारा भोगादिहेतुत्वं भवति । कुतः ? स्मृतिसंस्कारयोरेकरूपत्वात् । क्रिया ज्ञानमन्यद्वा रागादिकं यच्छक्त्यात्मना स्थितं स संस्कारः । तत्र क्रियासंस्कारः क्रियात्मना परिणतः, ज्ञानसंस्कारः स्मृत्यात्मना, अन्यसंस्कारोऽन्यात्मना परिणत इत्येवं स्मृतिसंस्कारयोरभेदेनैकविषयत्वेन चैकरूपत्वादानन्तर्यशब्दितः कार्यकारणभावः सजातीययोः संभवति, न विजातीययोः । न हि व्यवधानं संस्कारस्य विरूपकार्यकारित्वमापादयति; तथात्वे घटानुभवजसंस्कारादनन्तरमननुभूतस्मृत्यापत्तेरित्यर्थः ।।

**ஜாதி தேச காலவ்யவஹிதாஞம் அபி ஆனந்தர்யம் ஸ்மிருதி ஸம்ஸ்காரயோ: ஏகரூபத்வாத்** (சூ-9)

அஞதியான இந்த ஸம்ஸாரத்தில் எந்த கர்மாவால் எந்த ஜன்மத்தில் போகங்களால் ஸஞ்சிதமான எந்த வாசனையோ அதுகள் ஜன்ம கோடியாலும், ஸ்வர்க்காதி தேசத்தாலும், நூறு கல்பத்தாலும் மறைவுபட்டபோதிலும், அந்த ஜாதீயகர்மாவால் அந்த ஜன்மத்தில் (தை) மறுபடி அடைந்தபோது அதே கர்மாவால் - ஜன்மாவால் வெளிப்படுவதால் ஆனந்தர்யம் ஸ்மிருதித்வாரா போகாதி காரணம் உண்டாகிறது. எப்படி? எப்படி என்ருல் ஸ்மிருதி, ஸம்ஸ்காரம் இவைகள் ஒரே ரூபமாக இருத்தலால். க்ரியா ஞானம் அல்லது அந்நியமான ராகாதிகள், சக்தி ரூபமாக இருப்பதுதான். அது ஸம்ஸ்காரம். அதில் க்ரியாரூப ஸம்ஸ்காரம் கிரியாத்மாவாக பரிணமிக்கிறது; ஞான ஸம்ஸ்காரம் ஸ்மிருதிரூபமாக பரிணமிக்கிறது; அன்ய ஸம்ஸ்காரங்கள் அன்யரூபமாக பரிணமிக்கிறது. இம்மாதிரி ஸ்மிருதி, ஸம்ஸ்கார, அபேதத்தால், ஏக விஷயத்தால், ஏகரூபத்தால் ஆனந்தர்யம் என்ற சப்தத்தால் (பெயரால்) கார்ய காரண பாவம் கொண்டு ஸஜாதீயமாக ஆகிறது. விஜாதீயம் அடைவது இல்லை. வ்யவதானமானது ஸம்ஸ்காரத்துக்கு விரூபகார்யகாரித்வம் ஸம்பாதிக்கிறதில்லை. அப்படியே கடானுபவஜ (உண்டான) ஸம்ஸ்காரத்துக்கு பிறகு அனனுபூதஸ்மிருதி அடைவதில்லை என்று கருத்து.

ननु जन्मान्तरितवासना न सन्तीति वदन्तं चार्वाकं प्रत्याह—

சரி, ஜன்மாந்தரித (ஜன்மாவுக்கு பின்) வாசனை இல்லை (இருக்கவில்லை) என்று கூறும் நாஸ்திக மதம் குறித்துக் கூறுகிருர் ;—

**तासामनादित्वं चाशिषो नित्यत्वात् ॥ १० ॥**

न केवलं तासां वासनानामानन्तर्यम्, किं त्वनादित्वमपीति चार्थः । 'सदाहं भूयासम्' इत्याशिषो मरणत्रासस्य नित्यत्वात्सर्वजनेष्वव्यभिचारादित्यर्थः ॥



**தாஸாம் அஞதித்வம் ச ஆசிஷோ நித்யத்வாத்** (சூ-10)

கேவலம் (அவைகளின்) வாசனைகளின் (ஆனந்தர்யம்) முடிவு என்பது மாத்திரம் இல்லை. ஆஞல் அவைகளுக்கு அஞதித்வமும் இருக்கிறது என்று பொருள். ''ஸதா அஹம் பூயாஸம்'' இருக்கணும் என்ற ஆசையும் மரணத்தின் (த்ராஸம்) பயம் நித்தியமாக எல்லா ஜனங்களிடத்திலும் மாருது இருத்தலாலும் என்பதால் வாசனை அஞதி என்று கருத்து.

ननु वासनानामनादितया कथं तदुच्छेदः ? तत्राह—

சரி, வாசனைகள் அஞதி என்பதால் எப்படி அதனைக் களைவது? என்று கூறுகிருர் :—

**हेतुफलाश्रयालम्बनैः संगृहीतत्वादेषामभावे तदभावः ॥ ११ ॥**

नैताः पुरुषवदनादयः, किं तु कार्या एव प्रवाहानादयः । अतः कारणोच्छेदादुच्छेदः संभवति । तथा हि— पूर्वपूर्वसंस्कारलक्षणाविद्या ह्यस्मिताहेतुः । सा च मनुष्योऽहं ममेदमिष्टमनिष्टमिति भ्रमहेतुः । सोऽपि रागद्वेषयोः । तौ च परनिग्रहानुग्रहादिद्वारा धर्माधर्मयोः । तौ च भोगे । सोऽपि वासनासु । ताः पुनर्भ्रमादिषु । इत्यनादि संसारचक्रमनिशमावर्तते । तत्र वासनानां क्लेशकर्माणि हेतवः, जात्यायुर्भोगाः फलम्, चित्तमाश्रयः शब्दादिकमालम्बनम्; तैः संगृहीतत्वात् आदरनैरन्तर्यसत्कारानुबन्ध्यष्टाङ्गयोगजाविप्लवविवेकख्यात्या उच्छेदे सति कारणानामभावादुच्छेदो भवतीत्यर्थः ॥

**ஹேது பல ஆஸ்ரய ஆலம்பனை: ஸங்கிருஹீதத்வாத் ஏஷாம் அபாவே தத் அபாவ:** (சூ-11)

இதுகள் (வாசனைகள்) புருஷவத் (புருஷதத்வம்போல) அஞதி அல்ல. ஆஞல் கார்யா: ஏவ-பிரவாஹ அஞதி.

அதன் காரணம் களையப்படுவதால் அதுவும் களையப்பட்டதாகிறது. அதுகள் (வாசனை) நான் மனுஷ்யன். எனக்கு இது இஷ்டம், இது இஷ்டமில்லாதது என்ற பிரம **ஹேது**வுடன் கூடினது. அது ராகத்வேஷத்தினுடையது. அது இரண்டும் பரநிக்ரஹ அனுக்கிரஹ த்வாரா தர்ம அதர்மத்துடன் கூடியது. அதுவும் போகத்தில் உள்ளது. அந்த போகம் வாசனைகள். அந்த வாசனைகள் மறுபடி பிரமாதிகளில் சேர்ப்பிக்கிறது. இப்படி அனாதி ஸம்ஸார சக்ரம் இடைவிடாது ஆவர்த்திக்கிறது. அங்கு வாசனைகளில் க்லேச கர்மங்கள் **ஹேதுக்கள்**. ஜாதி ஆயுஸ் போகங்கள் **பலம்**. சித்தம் **ஆச்ரயம்**. சப்தம் முதலியன **ஆலம்பனம்**. அவைகளால் ஸங்கிரஹீதம் (ஸம்பாதிக்கப்பட்டது) ஆனதால், ஆதர, நைரந்தர்ய, ஸத்காரத்தோடு கூடிய அஷ்டாங்கயோகத்தால் உண்டான அவித்யா விரோதியான விவேகக்யாதியால் களையப்படவே (உச்சேத:) காரணத்தின் அபாவம் உண்டாகி கார்ய (வாசனை) நாசம் ஏற்படுகிறது என்று கருத்து.

नन्वास्तां तावदासां वासनानामुच्छेदः; किमुत्पत्तिरसतीनां सतीनां वा ? न तावदाद्यः, असंभवात्; न ह्यसतः शशविषाणस्य सास्ति; नापि द्वितीयः, असंभवादेव; न हि सद्रूपायाश्चितिशक्तेरुत्पत्तिः संभवति येन तथा स्यादित्याशङ्क्य शक्तिरूपेण स्वप्रकृतौ विद्यमानानामेवाभिव्यक्तिरुत्पत्तिरित्याशयेनाह—

சரி, (இருக்கட்டும்) இப்போது வாசனைகளின் உச்சேதம் அதுவரை இருக்கட்டும். உத்பத்தி அஸத்துக்கா அல்லது ஸத்துக்கா? முதல் சொன்னதுக்கு இல்லை (அதாவது அஸத்துக்கு). அஸம்பவாத். (இல்லாததுக்கு உண்டு என்பது நேர்விரோதம்) இல்லாததுக்கு முயற்கொம்பு போல இருப்பு). இரண்டாவதாக சொன்ன (ஸத்)த்துக்கும் இல்லை (உத்பத்தி). அதாவது அஸம்பவாத் எப்போதுமே உள்ளது (ஸத்)க்கு உத்பத்தி எது? ஸத்ரூபமான சிதி சக்திக்கு உத்பத்தி என்றது ஏது? எப்படி என்று சங்கித்து



சக்தி ரூபமாக தனது பிரகிருதியில் உள்ளதுதான், **வெளிப்பட்டது** உத்பத்தி என்று ஆசயத்தால் (**ஸம்ஸ்காரம்**) சொல்லுகிறார் :—

**अतीतानागतं स्वरूपतोऽस्त्यध्वभेदाद्धर्माणाम् ॥ १२ ॥**

अतीतानागतं धर्मजातं धर्मिणि शक्तिरूपेणास्त्येव । अतस्तस्याभिव्यक्तिपदवेदनीयोत्पत्तिरुपपद्यते । ननु तर्हि वासनादिबन्धस्य विद्यमानत्वात्तत्त्वज्ञानवैयर्थ्यमिति चेत्, न; धर्माणामनागताद्ध्वनां भेदात् । वर्तमानाध्वनि दुःखादिवासनाचित्रं साधिकारमसंख्येयपरिणामशीलं चित्तं भोग्यतामापन्नं बन्ध इत्युच्यते । तत्त्वज्ञाने सति निरधिकारमतीताध्वनि प्रवेशितं प्रवृत्त्यात्मना सदपि पुनर्व्युत्थानबीजस्य कर्तव्यपुरुषार्थस्य कृतत्वान्न पुनरावर्तत इत्यर्थः ॥

**அதீத அனாகதம் ஸ்வரூபதோ அஸ்தி அத்வ பேதாத் தர்மாணாம்** (சூ-12)

அதீத (சென்ற காலம்) அனாகத (வருங்காலம்) என்ற தர்ம (குண) ஜாதம் தர்மியில் சக்தி ரூபமாக இருக்கவே இருக்கிறது. ஆகையால் அதன் வெளிப்படுதல் என்ற தன்மையால் உத்பத்தி என்று கொள்ளப்படுகிறது. அப்படியானால் வாசனாதி பந்தம் (சக்தி ரூபம்) சித்தத்தில் இருப்பதால் தத்வ ஞானம் வியர்த்தம் என்றால், அப்படி அல்ல; தர்மாணாம் (குணத்துக்கு) வருங்காலம் (அனாகத அத்வா) பேதமாவதால் (நாசமாவதால்). வர்த்தமான (நிகழ்கால) அத்வனி எண்ணிக்கையில் அடங்காத துக்காதிகளின் அதிகார வாசனா பரிணாமசீல சித்தம் யோக்யத்தன்மை அடைந்து பந்தம் என்று சொல்லப்படுகிறது. தத்வ ஞானத்(தில்)தால் நிரதிகாரத்தன்மை அடைந்து அதீத அத்வாவில் (வருங்கால) பிரவேசிக்கப்பட்ட பிரவிருத்தியால் மறுபடி முளை (வறுக்கப்பட்டது) கர்த்தவ்யம்-கிருதம் ஆகி மறுபடி ஆவ்ருதி ஆவதில்லை என்று கருத்து.

ननु स्वरूपतोऽस्तीत्युक्तम्; किं तत्स्वरूपमित्यत्राह—

சரி, ஸ்வரூபதோ அஸ்தி என்று சொல்லப்பட்டது. ஸ்வரூபம் என்பது என்ன என்று சொல்லுகிறார் :—

**ते व्यक्तसूक्ष्मा गुणात्मानः ॥ १३ ॥**

व्यक्ता वर्तमानाध्वानः, सूक्ष्मा अतीतानागताध्वानः; ते महदादयो घटादिविशेषान्ता गुणात्मानः सत्त्वरजस्तमःस्वरूपास्तत्प्रकृतिकत्वादित्यर्थः ॥

**தே வ்யக்த ஸூக்ஷ்மா குணாத்மான :** (சூ-13)

வ்யக்தா என்பது வர்த்தமான அத்வாக்கள்; ஸூக்ஷ்மா என்பது அதீத அனாகத அத்வாக்கள். அவைகள் மஹத் (தத்வம்) முதல் கடாதி விசேஷம் வரை உள்ள குணங் (ஆத்துமா)கள், ஸத்வ-ரஜஸ்-தமஸ் ஸ்வரூபங்கள், அதன் ப்ரகிருதி (கம்) தன்மை என்பதால் என்று கருத்து.

ननु महदादीनां गुणत्रयपरिणामत्वेन प्रत्येकमेकत्वं न स्यादित्याशङ्क्याह—

சரி, மஹத் முதலிய குணத்திரயத்தின் பரிணாமம் என்றதால் ஒவ்வொன்றும் (ஸத்வம்-ரஜஸ்-தமஸ்) தனித் தனி (ஸ்வபாவ) ஆகுமோ என்று சங்கித்து கூறுகிறார் :—

**परिणामैकत्वाद्वस्तुतत्त्वम् ॥ १४ ॥**

दृश्यते हि बहूनामेकः परिणामः, यथा तैलवर्त्तिवह्नीनामेकः प्रदीपपरिणामः । न च तर्हि मृत्सुवर्णक्षीराणामेकः परिणामः स्यादिति वाच्यम्; तेषामङ्गाङ्गिभावाभावात् । गुणानां त्वङ्गाङ्गिभावेन तत्परिणामस्यैकत्वाद्वस्तुनो महदादेस्तत्त्वमेकत्वं युज्यत इत्यर्थः ॥



**பரிணாம ஏகத்வாத் வஸ்து தத்வம்** (சூ-14)

அனேகங்களுக்கு ஏகம் தெரிகிறது (பஹூனாம் த்ருஸ்யதே ஏக:) பரிணாமம். எப்படியென்றால் எண்ணை, திரி, நெருப்பு இதுகளுக்கு ஏக: பரிணாமம் என்ற பெயர் தீபம் என்பது (பரிணாமம்). ஆனால் மண், பொன், பால் சேர்ந்து ஒரு பரிணாமம் உண்டாகாது. ஏனென்றால் அதற்கு அங்க அங்கி பாவம் இல்லை. குணங்களுக்கோ என்றால் அங்க அங்கி பாவத்தால் அதன் பரிணாமத்துக்கு ஏகத்வம், ஆகையால் வஸ்துக்களான மஹதாதிகளுக்கு 'தத்வ மேகத்வம்' பொருந்தும் என்று கருத்து.

ननु क्षणिकविज्ञानात्मकचित्तातिरिक्तं वस्तु नास्त्येवेति वदन्तं बौद्धं प्रत्याह—

சரி, க்ஷணிக விஞ்ஞானாதிகளான (பௌத்தர்கள்) குறித்துசித்தத்துக்கு அதிரிக்தமாக (வேறாக) வஸ்து இல்லை என்று கூறும் புத்தர்களைக் குறித்துச் சொல்லுகிறார் :—

**वस्तुसाम्येऽपि चित्तभेदात्तयोर्विभक्तः पन्थाः ॥ १५ ॥**

तयोर्विज्ञानात्मकचित्तवस्तुनोर्विभक्तः पन्था भिन्नो मार्गः । कुतः ? वस्तुतः स्त्रीपिण्डादेः साम्येऽपि चित्तानां भेदात् । यथैकस्यां नार्यां पत्युः सुखविज्ञानं सपत्न्या दुःखविज्ञानं कामुकस्य तदलाभान्मोहे विषादविज्ञानं निष्कामस्योपेक्षाविज्ञानम्; सर्वेषाम् 'या त्वया दृष्टा सा मयापि दृष्टा' इत्यबाधितविषयप्रत्यभिज्ञानादेकं वस्त्वनेकं विज्ञानमिति तयोर्भेदः । अतो न विज्ञानात्मकं सर्वं वस्तु; किं तु तस्माद्भिन्नं गुणत्रयपरिणाम इति दिक् ॥

**வஸ்து ஸாம்யேபி சித்த பேதாத் தயோ :**
**விபக்த: பந்தா:** (சூ-15)

அவர்களின் (தயோ: புத்தர்களின்) க்ஷணிக விஞானாத்மகமான சித்தம் பின்னமார்க்கம் உள்ளதாக இருக்கிறது.

எப்படி என்ருல் - ஒரே ஸ்திரீ (வ்யக்தி) ஸமானவஸ்து சித்தம் குறித்து பேதம் அடைகிறது. அதாவது அவள் பர்த்தாவுக்கு ஸுக அறிவு சித்தம்,சக்களத்திக்கு துக்க விஞ்ஞான சித்தம், காமிக்கு மோஹம் வெறுப்பு அறிவு, நிஷ்காமனுக்கு உபேக்ஷ அறிவு. எல்லோருக்கும் ஒருவர் பார்த்த ஸ்திரீயே மற்றவரும் பார்த்தது. விஷயம் (வ்யக்தி) பாதம் அடையவில்லை. அறிவால் வேறுபடுகிறது அநேகம் ஆகிறது. அதுதான் (அறிவு) பேதம் ஆகையால் ஸர்வம் என்ற **வஸ்து** புத்தி அறிவு அல்ல. ஆனுல் புத்தி அறிவு அதிலிருந்து வேருன குணத்ரய பரிணமம், தள்ளத்தக்கது. (வித்யாரண்ய பஞ்சதசி-த்யானதீபம். சுலோகம் 118. அபிக்ஞாபகம் ஞானம் போதம் அல்ல, ந நித்யம் பேத: ஜனயதி -ப்ரஹ்மம் நித்யம்)

नन्वस्तु विज्ञानादन्यद्वस्तु; तच्चैकविज्ञानाधीनमिति वदन्तं प्रत्याह—

சரி, விஞ்ஞானத்தைக் காட்டிலும் அந்நியம் வஸ்து. அப்படியே ஆகட்டும். ஆனுல் ஏகவிஞ்ஞான அதீனம் என்று கூறுவது பற்றிச் சொல்லுகிருர் :—

**न चैकचित्ततन्त्रं वस्तु तदप्रमाणकं तदा किं स्यात् ॥१६॥**

यद्येकचित्तस्य ग्राह्य घटवस्तु. तदा तस्मिंश्चित्ते पटादिषु व्यग्रे तद्वस्तु अप्रमाणकं किं स्यात् ? न स्यादित्यर्थः । न चेष्टापत्तिः, पुनस्तद्दर्शने सोऽयमित्यबाधितप्रत्यभिज्ञानात् एकस्य व्यग्रत्वेऽप्यन्येन दृश्यमानत्वाच्च । तस्मान्नैकचित्ततन्त्रं वस्तु, किंतु चित्तातिरिक्तं स्वतन्त्रमिति सिद्धम् ।

**ந ச ஏக சித்த தந்த்ரம் வஸ்து தத்**
**அப்ரமாணகம் ததா கிம் ஸ்யாத்** (சூ-16)

எப்படி ஏகசித்தத்தின் கிராஹ்யமான கடம் என்ற வஸ்து, அப்போது அதே சித்தத்தில் படம் வஸ்து (வேஷ்டி)



தோன்றியதால் அது அப்ரமாணமாகி விடுமா? என்ன? ஆகாது. அது ஸம்மதம் அல்ல. மறுபடி ஒருவனைப் பார்த்து அவனே இவன் என்று அறிவதால் அபாதமான அறிவு. ஒன்று பார்த்து அறிந்த போதிலும் அந்நியத்தைப் பார்த்து அறிதல் சரிதான். ஆகையால் வஸ்து ஏக சித்த தந்த்ரம் அல்ல. ஆனுல் சித்த **அதிரிக்தம்**, ஸ்வதந்த்ரம் என்று ஸித்தம். (வஸ்து தத்ரோ பவேத் போத: கர்த்ரு தந்த்ரம் உபாஸனம். வித்யாரஸ்யா பஞ்சதசி)

ननु चित्तस्याहंकारिकत्वेन सर्वगतत्वात्सर्वदा सर्वं ज्ञायेतेत्यत आह—

சரி, சித்தத்தினுடைய ஆஹம்காரிகம் என்ற பாவத்தால் ஸர்வகதத்தால் எங்கும் செல்லக்கூடியதால் ஸர்வதா ஸர்வம் அறிகிறது என்று கூறுகிருர் :—

**तदुपरागापेक्षत्वाच्चित्तस्य वस्तु ज्ञाताज्ञातम् ॥ १७ ॥**

सर्वगतत्वेऽपि चित्तं यत्र शरीरे वृत्तिमत्तेन शरीरेण सह संबन्धो यस्य वस्तुनस्तत्रैव ज्ञानं नेतरत्र । एवं चेन्द्रियप्रणाडिकया चित्तं येन वस्तुनोपरक्तं तद्वस्तु ज्ञातम्, यदुपरक्तं न भवति तदज्ञातमित्यर्थः । अनेन चित्तं परिणामि ज्ञाताज्ञातविषयत्वाच्छ्रोत्रादिवदिति चित्तस्य परिणामित्वेऽनुमानमुक्तं भवतीत्यभिसंधिः ।

**தத் உபராகாபேக்ஷத்வாத் சித்தஸ்ய வஸ்து**
**ஞாதா அக்ஞாதம்** (சூ-17)

சித்தம் ஸர்வகதமாக இருந்த போதிலும் எங்கு சரீரத்தில் விருத்திமத்தாக உள்ளதோ அங்கு சரீரத்தோடு கூட அந்த வஸ்துவின் ஞானம் உள்ளதாக ஆகிறது. வேறு இடத்தில் அல்ல. இம்மாதிரி சித்தம் இந்திரியங்கள், நாடிகளோடு எங்கு வஸதுவோடு ஈஷிக்கொள்ளுகிறதோ அந்த வஸ்து ஞாதம் ஆகிறது. எங்கு ஈஷிக்கொள்ளவில்லையோ

அது அஞ்ஞாதம் என்று அர்த்தம். இதனல் சித்தம் பரிணமி. ஞாத அஞ்ஞாத விஷயத்துடன் கூடியவன் ச்ரோத்ராதிகள் போல என்று சித்தத்தின் பரிணமத்தில் அனுமானம் சொல்லப்பட்டதாகின்றது.

नन्वित्थमात्मनोऽपि परिणामित्वं किं न स्यादित्यत आह–

சரி, ஆத்மாவுக்கும் இம்மாதிரி பரிணமித்வம் ஏன் இருக்கக்கூடாது என்பது குறித்துச் சொல்லுகிருர் :—

**सदा ज्ञाताश्चित्तवृत्तयस्तत्प्रभोः पुरुषस्यापरिणामात् ॥१८॥**

पुरुषोऽपरिणामी सदा ज्ञातृत्वात् न यदेवं न तदेवं यथा चित्तम् । तथा यद्यसौ पुरुषः परिणामी स्यात्तदा परिणामस्य कादाचित्कत्वात्तासां चित्तवृत्तीनां सदा ज्ञातत्वं न स्यात् । अतः सदा ज्ञातृत्वादपरिणामी पुरुष इत्यर्थः ॥

**ஸதா ஞாதா: சித்த விருத்தய: தத்ப்ரபோ: புருஷஸ்ய அபரிணமாத்** (சூ-18)

புருஷ: அபரணமி ஸதா ஞாதத்வாத். சித்தத்தைப் போல் இப்படியும் அப்படியும் அல்ல. (ஞாதா ஞாதம்). இந்த புருஷன் பரிணமியாக இருந்தால் அப்போது பரிணமத்தின் காதாசித்கத்வம் (ஒரு சமயம் இருக்கும், ஒரு சமயம் இருக்காது) உண்டாகும். அவைகள் சித்த விருத்தியைச் சேர்ந்தது, ஸதா ஞாதத்வம் என்பது இருக்காது. ஆகையால் ஸதா ஞாத்ருத்வம். அதனல் அபரிணமி புருஷன் என்று பொருள்.

ननु क्षणिकं चित्तमेव स्वपरावभासकमस्तु, किं पुरुषेणेत्यत आह—

சரி, க்ஷணிகம் சித்தமே, ஸ்வ-பர, அவபாஸகம் (அஸ்து) இருக்கட்டுமே, இதற்கு புருஷன் வேறு எதற்கு? என்று கூறுகிருர் :—



**न तत्स्वभासं दृश्यत्वात् ॥ १९ ॥**

'घटोऽयं रूपवान्' इतिवत् 'सुख्यहम्' 'क्रुद्धोऽहम्' 'शान्तं मे मनः' इति दृश्यत्वाच्चित्तं स्वभासं स्वप्रकाशं न भवति; किंतु स्वातिरिक्तद्रष्टृकं न क्षणिकम्, 'सोऽहम्' इति प्रत्यभिज्ञानादित्युक्तम् ॥

**ந தத் ஸ்வபாஸம் த்ருஸ்யத்வாத்** (சூ-19)

இது கடம் (குடம்) என்பது போல் ''நான் ஸுகி'' ''நான் கோபி'' ''நான் சாந்தன்'' இம்மாதிரி த்ருஸ்யமானதால் சித்தம் விஷயபாஸம் உள்ளது. ஆனல் ஸ்வப்ரகாசம் ஆகாது. ஆனல் தனக்கு அன்யமானதான த்ருஷ்ட்ருகம் ந க்ஷணிகம், ஸோஹம் என்ற பிரத்யபிஞானத்தால் என்று கூறுகிருர் :—

किं च—

மேலும் :—

**एकसमये चोभयानवधारणम् ॥ २० ॥**

यदि चित्तं स्वपरावभासकं स्यात्तदा तयोश्चित्तार्थयोर्जन्यजनकभावेन चित्तक्षणेऽर्थस्य अर्थक्षणे चित्तस्य चासत्त्वादेकस्मिन्नेव क्षणे तयोरुभयोरवधारणमनुभवो न स्यात् । तस्मात्पुरुष एवं चित्तार्थयोरवभासको न चित्तमित्यर्थः ॥

**ஏகஸமயே ச உபய அனவதாரணம்** (சூ-20)

சித்தம் ஸ்வ-பர அவபாஸகமானல் அப்போது சித்த அர்த்தத்துக்கு ஜன்யம் ஜனகபாவம் (உண்டாவது-உண்டாக்குவது) சித்த க்ஷணத்தில் அர்தத்துக்கும் அர்த்த க்ஷணத்தில் சித்தத்துக்கும் (அஸத்வாத்) இருப்பு இருக்காது. ஒரே க்ஷணத்தில் இரண்டு இருத்தல் அனுபவம்

இராது. ஆகையால் புருஷனே தான், சித்த - அர்த்த இரண்டின் அவபாஸகன். சித்தம் அல்ல என்று கூறுகிறார்.

ननु मा नाम भूच्चित्तं स्वप्रकाशम्; चित्तान्तरेण प्रकाश्यताम्; किं पुरुषेणेत्याशङ्क्याह—

சரி, சித்தம் ஸ்வப்ரகாசம் என்ற பெயர் உடையதாக வேண்டாம். வேறு சித்தத்தால் பிரகாசிப்பிக்கப்படுகிறது என்று கொள்ளலாமே? புருஷனால்தான் என்று ஏன் கொள்ளவேண்டும் என்று சங்கை செய்து கூறுகிறார் :—

**चित्तान्तरदृश्यत्वे बुद्धिबुद्धेरतिप्रसङ्गः स्मृतिसंकरश्च ॥२१॥**

यदि नीलादिगोचरं चित्तं चित्तान्तरेण दृश्येत, तदा तदपि बुद्ध्यात्मकं चित्तमन्यया बुद्ध्या, साप्यन्ययेत्यतिप्रसङ्गः स्याम्। किं चानन्तचित्तानामनुभवे सत्यनन्तचित्तस्मृतीनां संकरः प्राप्नोति। अतश्चितिशक्तिभास्यं चित्तमिति सिद्धम् ॥

**சித்தாந்தர த்ருச்யத்வே புத்தி புத்தே:**
**அதிப்ரஸங்க: ஸ்மிருதி ஸங்கரஸ்ச** (சூ-21)

நீலம் முதலானதாக கோசரிக்கும் சித்தம் வேறு சித்தத்தால் காணப்படுபிறது. அப்போது அதுவும் புத்தியாத்மகம், அந்நியயா புத்தியா சித்தம், பிறகு அதுவும் வேறு புத்தியால் அந்நியம். இவ்வாறு அதிபிரஸங்கம் தோஷம் உண்டாகிறது. மேலும் முடிவில்லாத சித்தானுபவத்தால் அனந்த சித்த (முடிவில்லாத) ஸ்மிருதி ஸங்கரம் அடைகிறது.. ஆகையால் சித்தம் சிதி சக்தியால் பாஸிக்கிறது என்று சித்திக்கிறது.

ननु कूटस्थनित्यायाश्चितिशक्तेश्चित्तेन क्रियापूर्वकसंप्रयोगासंभवात्कथं तत्तया भास्यमित्यत आह—

சரி, கூடஸ்த நித்ய சித் சக்திக்கு சித்தத்தோடு கிரியா பூர்வகமான ஸம்ப்ரயோகம் (ஸம்பந்தம்) ஸம்பவிக்காதே,



எப்படி அது (சித்தம்) அதனால் பாஸ்யம் என்று சொல்லுவது? என்பது குறித்து விளக்கம் கூறுகிறார்:—

**चितेरप्रतिसंक्रमायास्तदाकारतापत्तौ स्वबुद्धिसंवेदनम् ॥ २२ ॥**

यथा परिणामित्वाद्बुद्धितत्त्वस्य क्रियया घटादौ संप्रयोगः समस्ति, न तथा चितिशक्तेर्बुद्धितत्त्वे प्रतिसंक्रमः संप्रयोगः अपरिणामित्वात्। अपि तु सवितुः सलिले प्रतिबिम्बवच्चितिशक्तेर्बुद्धौ प्रतिबिम्बे सति तस्या बुद्धेश्चिदाकारतापत्तौ सत्यां स्वभोग्यबुद्धिसंवेदनं भवति। चिच्छायाग्राहित्वसंबन्धेन चिदुपरक्तं चित्तं चिद्भास्यमित्यनवद्यम् ॥

**சிதே ரப்ரதி ஸம்க்ரமாயா: ததாகாரதா**
**ஆபத்தௌ ஸ்வபுத்தி ஸம்வேதனம்** (சூ-22)

எப்படி புத்தி தத்துவத்துக்கு பரிணாமித்வம் என்ற கிரியையால் கடம் (குடம்) முதலியவற்றில் ஸம்பந்தம் (ஸம்பிரயோகம்) இருக்கிறதோ, அது போல சிதி சக்திக்கு புத்தி தத்வத்தில் (ப்ரதிஸங்க்ரம:) ஸம்பந்தம் கிடையாது. ஏன்? சிதி சக்தி அபரிணாமி. அப்படியிருந்தும் சூரியன் ஜலத்தில் பிரதிபிம்பிப்பது போல சிதி சக்தி புத்தியில் பிரதிபிம்பித்தபோது அந்த புத்திக்கு சித்தின் ஆகாரம் உண்டானதாய்க் கொண்டு தன்னுடைய போக்யமான புத்தி ஸம்வேதனம் உண்டாகிறது. சித் சாயாக்ராஹித்வ ஸம்பந்தம், சித் ஈஷிக்கொள்கிற (உபரக்தம்) சித்தம், சித் பாஸ்யம் என்று கொள்வது மிகையாகாது.

ननु तर्हि केषांचिच्चित्तमेव चिदात्मेति भ्रमः कथमित्याशङ्क्य तेषां भ्रमबीजमाह—

சரி, அப்படியானால் சில பேர்கள் சித்தமே சிதாத்மா என்ற பிரமம் அடைவது எதனால் என்ற சங்கை செய்து, அவர்களின் பிரமை (பீஜம்) காரணம் கூறுகிறார் :—

**द्रष्टृदृश्योपरक्तं चित्तं सर्वार्थम् ॥ २३ ॥**

सर्वो द्रष्टृदृश्यरूपोऽर्थो विषयो यस्य तत्सर्वार्थम् । तत्र चित्सांनिध्याच्चिद्रूपतामिव प्राप्त द्रष्टृपरक्त द्रष्टृविषयं भवति। इन्द्रियादिद्वारा दृश्योपरक्त तदाकारं भवति । तथा च भोग्य-शब्दाद्याकारं सुखदुःखादिपरिणामलक्षणभोगात्मकं चित्त दृश्यमपि चित्प्रतिबिम्बाभेदात्मेति सौगतानां भ्रमः । तत्र विवेकिना चित्तस्य भोग्यतया तस्मादन्यो भोक्ता स्वीकर्तव्य इति भावः ॥

**த்ருஷ்டரு திருஸ்ய உபரக்தம் சித்தம் ஸர்வார்த்தம்** (சூ-23)

ஸர்வார்த்தம் என்பது ஸர்வ த்ருஷ்ட்ரு த்ருஸ்யரூப மான அர்த்தம் கொண்டவர்கள் என்பது. அங்கு சித் ஸாந்நித்யத்தால், சித்ரூபமாக ப்ராப்தம் ஆனதில் **த்ருஷ்ட்ரு உபரக்தம்.** (ஈஷிக்கொள்தல்) **த்ருஷ்ட்ரு விஷயம்** ஆகிறது. இந்திரியாதி த்வாரா **த்ருஸ்ய உபரக்தம்** (த்ருஸ்ய) ததாகாரம் ஆகிறது, **த்ருஸ்ய விஷயம்.** ஆகையால் போக்ய சப்தாதி ஆகாரமான, சுகதுக்க பரிணம லக்ஷணமான, போகாத்மகமான, சித்தம் த்ருஸ்யம். இருந்தபோதிலும் சித் பிரதிபிம்ப அபேதத்தால் ஆத்மா என்று கொள்ளப்படுவதான பிரமம். ஆகையால் விவேகி யினுல் சித்தத்தின் யோக்யத்தன்மையால் அதற்கு அந்நிய மான போக்தா ஸ்வீகரிக்கத்தக்கது என்று பாவம்(கருத்து).

अतश्चान्यो भोक्ता चित्तादस्तीत्याह—

ஆகையால் சித்தத்துக்கு அந்நியமாக போக்தா இருக் கிறது என்று கூறுகிருர் :—

**तदसंख्येयवासनाभिश्चित्रमपि परार्थं संहत्यकारित्वात् ॥ २४ ॥**

यद्यपि क्लेशकर्मविपाकवासनाभिरनन्ताभिश्चित्रं सुखाद्याश्रयतया भोक्तृकल्पं चित्तम्, तथापि परस्य निरुपचरितचित्स्वभावस्यार्थौ भोगापवर्गौ साधयतीति परार्थं भोग्यमेव न भोक्ता । कस्मात् ? संहत्य देहेन्द्रियादिसहकारिभिर्मिलित्वा भोगादिकार्यकारित्वात् । यन्मिलित्वा कार्यकारि तत्परार्थं यथा गृहादि देवदत्तार्थम् । तस्माच्चित्तादन्यश्चिदात्मा भोक्तास्तीति सिद्धम् ॥



**தத் அஸங்க்யேய வாஸனுபி: சித்ரம் அபி பரார்த்தம் ஸம்ஹத்ய காரித்வாத்** (சூ-24)

எப்படியிருந்தபோதிலும் க்லேச, கர்ம, விபாக, வாசனைகளால் அனந்தம், சித்ரம், ஸுகாதி ஆச்ரயம், ஆன போக்த்ரு கல்பிதமான சித்தம், பரனுை நிரூபிக்க முடியாத வனுை, சித் ஸ்வபாவத்துக்கு போகம் - அபவர்க்கம் ஸாதித்த போதிலும் அவன் போக்யம்தான் (திருஸ்யம் தான்). போக்தா அல்ல (த்ருஷ்டா அல்ல). எந்தக்காரணத்தால்? என்ருல் (சித்தம்) தேஹ இந்திரியாதிக்கு ஸஹகாரியாக ஒன்று சேர்ந்து போகாதி காரியத்தை செய்து வைக்கிருன். எது ஒன்று சேர்ந்து (கூடி) கார்ய காரியோ அது பரார்த்தத்துக்குத்தான். எப்படிகிருஹம் புதவியன தேவதத்தன் முதலியவருக்கு என்பது போல. **ஆகையால்** சித்தத்துக்கு அந்நியமாக **சிதாத்மா போக்தா அஸ்தி (இருக்கு) என்று ஸித்திக்கிறது.**

इत्थं प्रासङ्गिकं परिसमाप्य अधुना कैवल्यं निरूपयितुं तद्योग्यमधिकारिणं दर्शयति—

இம்மாதிரி பிரஸங்கித்த இந்த விஷயத்தை முடித்து, இப்போது கைவல்யத்தை நிரூபிக்கும் பொருட்டு அதன் அர்ஹதையுள்ள அதிகாரியை காண்பிக்கிருர் :—

**विशेषदर्शिन आत्मभावभावनाविनिवृत्तिः ॥ २५ ॥**

पूर्वोक्तविवेकेन बुद्धेरन्यश्चिन्मात्रः पुरुषोऽहमिति विशेषदर्शिन आत्मभावे तत्त्वे भावना जिज्ञासा विनिवर्तते, ज्ञाते

जिज्ञासायोगात् । यस्य पूर्वजन्मसुकृतपरिपाकेण तत्त्वजिज्ञासा जायते, सोऽधिकारीति भावः ॥

**விசேஷ தர்சின ஆத்மபாவ பாவனு வினிவிருத்தி: (சூ-25)**

முன் சொன்ன விவேகத்தால் புத்திக்கு அந்நியனுன சித்மாத்ர: புருஷ: அஹம் என்ற **விசேஷ தர்சிக்கு** ஆத்ம தத்வத்தின் பாவனு ஜிக்ஞாஸா முடிவுற்றது. அறிந்தால் அறிய வேண்டியது என்பது சிடையாது. எவனுக்குப் பூர்வ ஜன்ம ஸுகிருத பரிபாகத்தில் தத்வ ஜிக்ஞாஸை உண்டாகிறதோ அவனே அதிகாரி என்று கருத்து.

ननु तत्त्वजिज्ञासोर्विशेषदर्शनानन्तरं चित्तं कीदृशं भवतीत्यपेक्षायामाह—

சரி, தத்வ ஜிக்ஞாஸிக்கு விசேஷ தர்சனு அனந்தரம், சித்தம் எப்படி இருக்கும் (உள்ளது) என்று அபேக்ஷித்துச் சொல்லுகிருர் :—

**तदा विवेकनिम्नं कैवल्यप्राग्भारं चित्तम् ॥ २६ ॥**

पूर्वं बुद्ध्यादावात्मत्वभ्रमदशायां यच्चित्तं विषयनिम्नं संसारप्राग्भारमासीत्, तदिदानीं निवृत्तभ्रमस्य योगिनश्चित्तं विवेकनिम्नं द्रष्टृदृश्ययोर्विवेको निम्नमालम्बनभूमिर्यस्य तत्; विवेकनिष्ठमिति यावत् । अत एव कैवल्यं प्राग्भारोऽवधिर्यस्य तत्कैवल्यप्राग्भारं कैवल्यफलावसानं भवतीत्यर्थः ॥

**ததா விவேகநிம்னம் கைவல்ய ப்ராக்பாரம் சித்தம் (சூ-26)**

பூர்வம் புத்தி முதலியதில், ஆத்மப்ரம தசையில் எந்த சித்தம் விஷயநிம்னம் (விஷயங்களை அவலம்பித்து உள்ளது) ஆக இருந்ததோ அது ஸம்ஸார ப்ராக்பாரம் (அவதியாக) இருந்தது. இப்போது அது ப்ரம நிவிருத்தி



யாகி யோகியின் சித்தம் விவேக நிம்னம் (ஆலம்பனம்) ஆலம்பன பூமியாகி (த்ருஷ்ட்ரு-திருஶ்யயோ: விவேக ஆலம்பன பூமி) நிற்கிறது. அதாவது விவேக நிஷ்டை உள்ளதாகிறது. ஆகையினுலேதான் கைவல்ய ப்ராக் பாரம்-கைவல்ய பலத்தை அடைந்ததாக ஆகிறது என்று கருத்து.

यद्येवं तदास्य व्युत्थानप्रत्ययाः कुतो भवन्तीत्यत आह—

அப்படியிருக்கும் போது (அதற்கு - சித்தத்துக்கு) வ்யுத்தான ப்ரத்யயங்கள் எப்படி உண்டாகின்றன? என்று கூறுகிருர் ;—

**तच्छिद्रेषु प्रत्ययान्तराणि संस्कारेभ्यः ॥ २७ ॥**

विवेकख्यातिपरस्यानुक्षणं क्षीयमाणेभ्यो व्युत्थानसंस्कारेभ्यो विवेकख्यातिच्छिद्रेष्वभिव्यक्तेभ्यः प्रत्ययान्तराणि भवन्तीत्यर्थः ॥

**தச்சித்ரேஷு ப்ரத்யாந்தராணி ஸம்ஸ்காரேப்ய: (சூ-27)**

விவேகக்யாதி பரனுக்கு அனுக்ஷணம் நாசமடைகின்ற வ்யுத்தான ஸம்ஸ்கரரங்கள் விவேகக்யாதி (சித்ரம்) இடைவெளிகளில் தோன்றுகிற வேறு பிரத்யயங்களால் உண்டாகின்றன.

ननु कोऽयमेतेषां संस्काराणां हानोपाय इत्यत्राह—

சரி, அப்படியானுல் இந்த ஸம்ஸ்காரங்களுக்கு (வ்யுத்தான ஸம்ஸ்காரத்துக்கு) ஹானம் நாச உபாயம் எப்படி என்று கூறுகிருர் ;—

**हानमेषां क्लेशवदुक्तम् । २८ ॥**

यथाविद्यादिक्लेशा विवेकख्यात्या दग्धाः पुनः संस्कारं न प्रसुवते, तथा व्युत्थानसंस्कारा अपि पुरुषख्यातिदग्धा अप्रसवधर्माणो भवन्तीत्यर्थः ॥

**ஹானம் ஏஷாம் க்லேசவத் உக்தம்** (சூ-28)

எப்படி அவித்யாதி க்லேசங்கள் விவேகக்யாதியால் கொளுத்தப்படுகின்றனவோ, மறுபடி ஸம்ஸ்காரம் ப்ரஸவிப்பதில்லையோ, (முளைக்கிறது இல்லையோ) அப்படியே வ்யுத்தான ஸம்ஸ்காரங்களும் புருஷக்யாதியால் எரிக்கப்பட்டதாகி அப்ரஸவதர்மா (முளைக்காததாக) ஆகிறது என்று அர்த்தம்.

अथ विवेकख्यातेरपि व्युत्थानरूपतया तन्निरोधोपायमुपदर्शयितुमाह—

பிறகு விவேகக்யாதியும் (விவேகக்யாதிஸாக்ஷாத்காரம் ஆகியும்) சித்தம் வ்யுத்தான ரூபமுள்ளதாகவே இருப்பதால், அதன் நிரோத உபாயம் காண்பித்துக் கூறுகிறார்;—

**प्रसंख्यानेऽप्यकुसीदस्य सर्वथा विवेकख्यातेर्धर्ममेघः समाधिः ॥ २९ ॥**

विवेकख्यातिरेव विशोकरूपावान्तरफलोन्मुखी सती प्रसंख्यानमित्युच्यते । तत्रापि अकुसीदस्य, कुत्सितेषु विषयेषु सीदतीति कुसीदो रागः, तद्रहितस्य विरक्तस्य, अत एव सर्वथा सर्वात्मना विवेकख्यातेः योगिनः अशुक्लकृष्णं धर्मं कैवल्यफलं मेहति सिञ्चतीति धर्ममेघाख्यः समाधिर्भवतीत्यर्थः ॥

**ப்ரஸங்க்யானே அபி அகுஸீதஸ்ய ஸர்வதா விவேகக்யாதே: தர்ம மேக: ஸமாதி:** (சூ-29)

ப்ரஸங்க்யானம் என்பது விவேகக்கியாதியே தான்—**விசோகா** என்ற அவாந்தர பலனுடன் கூடியது. (விபூதி பாதம். 51வது சூத்ரம். விசோகா என்ற அவாந்தர ஸித்தி-விவேகக்யாதிக்கு சொன்னது). அந்த ஸித்தி கிட்டிய போதிலும் அகுஸீதகனுக்கு (விரக்தி - வைராக்கியம் - வசீகார ஸம்க்ஞா உள்ளவனுக்கு) ஸர்வதா - ஸர்வாத்மனா -



விவேகக்யாதி உண்டாகிறது. அந்த யோகிக்கு அசுக்ல-அகிருஷ்ண கர்மபலமான, கைவல்ய பலமான, தர்மமேகம் மழை (போல) வர்ஷிக்கிறது. தர்ம மேக ஸமாதி ஸித்திக்கிறது என்று கருத்து. (விவேகக்யாதி ச்சித்ரம் நசிக்கிறது ரிதம்பரா ப்ரக்ஞை உண்டாகிறது)

ततः किमित्यत आह—

அதற்குப் பிறகு என்ன என்று கூறுகிறார் :—

**ततः क्लेशकर्मनिवृत्तिः ॥ ३० ॥**

ततो धर्ममेघात्सवासनक्लेशतन्मूलकर्मणां निवृत्तिर्भवतीत्यर्थः ॥

**தத: க்லேச கர்ம நிவ்ருத்தி:** (சூ-30)

பிறகு தர்ம மேகத்தால் (தர்மமேக ஸமாதியால்-ரிதம்பராவால்) வாஸனையுடன் கூடிய க்லேசங்கள் அதன் மூல காரணமான கர்மாக்கள் நிவர்த்தி அடைக்கிறது என்று கருத்து.

तदा किं भवतीत्यत्राह—

அப்போது என்ன உண்டாகிறது என்று கூறுகிறார் :—

**तदा सर्वावरणमलापेतस्य ज्ञानस्यानन्त्याज्ज्ञेयमल्पम् ॥ ३१ ॥**

आवृण्वन्ति चित्तमित्यावरणा रजस्तमोमयाः क्लेशकर्मरूपा मलाः । सर्वे च ते आवरणमलाः, तैर्धर्ममेघेणापेतस्य ज्ञानस्य विशुद्धबुद्ध्यालोकस्यानन्त्याज्ज्ञेयं सर्वं गगने खद्योतवदल्पमेव भवतीत्यर्थः ॥

**ததா ஸர்வ ஆவரண மலா அபேதஸ்ய ஞானஸ்ய ஆனந்த்யாத் ஞேயம் அல்பம்** (சூ-31)

சித்தத்தை சூழ்கின்ற தானஆவரணம் (மறைக்கிறது) ஆன ரஜஸ்-தமஸ் ஆகிய க்லேச கர்ம ரூபமான மலங்கள்,

எல்லாமே ஆவரணம். அவைகள் தர்மமேகத்தால் ஒன்றின ஞானத்தினால், அதாவது விசுத்தபுத்தி ஆலோகம் என்ற ஆனந்த்யம் என்ற அனுபவத்தால் ஞேய விஷயமான எல்லாம் மின்மினி பூச்சி ஆகாய வீதியில் தோன்றி மறைவது போல அல்பமாகி விடுகிறது என்று கருத்து.

ततः किमित्यत्राह—

அதன் பின் என்ன என்று சொல்லுகிறார் :—

**ततः कृतार्थानां परिणामक्रमसमाप्तिर्गुणानाम् ॥ ३२ ॥**

ततो धर्ममेघफलीभूतपरवैराग्यात्मकानन्तज्ञानान्तरं विवेकख्यातौ निरुद्धायाम्, कृतार्थानां कृतो निष्पादितोऽर्थो भोगापवर्गरूपः पुरुषार्थो यैस्ते तथोक्तास्तेषां सत्त्वादिगुणानां महदाद्यहंकारक्रमेण यः परिणामक्रमः तस्य समाप्तिर्भवतीत्यर्थः ॥

**ததः க்ருதார்த்தானாம் பரிணாமக்ரம ஸமாப்திः குணானாம் (சூ-32)**

பிறகு தர்மமேகபலமான, பரவைராக்கியாத்மகமான ஆனந்தஞான அனந்தரம் விவேகக்யாதியில் நிரோதம் அடைந்த கிருதார்தனுக்கு (போக - அபவர்க்க, ரூப கார்யம் முடிந்து புருஷார்த்தம் ஸாதித்த அவனுக்கு) ஸத்வாதி குணங்களுக்கு மஹத் அஹங்கார ரூபக்ரமமான எந்த பரிணாமக்ரமம் உண்டோ, அதற்கு பரிணாமக்ரம ஸமாப்தி உண்டாகிறது என்று கருத்து.

कोऽसौ क्रम इत्यपेक्षायामाह—

அந்த க்ரமம் எப்படிப்பட்டது என்று அபேக்ஷித்துக் கூறுகிறார் :—

**क्षणप्रतियोगी परिणामापरान्तनिर्ग्राह्यः क्रमः ॥ ३३ ॥**

क्षणप्रतियोगी क्रम इति स्वरूपनिर्देशः । क्षणौ प्रतियोगिनौ निरूपकौ यस्य स क्षणप्रतियोगी । एवं क्षणिकपरिणाम-



क्रमो मन्तव्यः । तत्र प्रमाणं परिणामापरान्तनिर्ग्राह्य इति । मृदि पिण्डघटकपालचूर्णकणानां प्रत्यक्षपरिणामानां पूर्वान्तः पिण्डः अपरान्तः कण इति पूर्वोत्तरावधिग्रहणेन क्रमो निष्कृष्य ग्राह्यो भवतीत्यर्थः ॥

**க்ஷண ப்ரதியோகி பரிணாம அபராந்த நிர்க்ராஹ்யः க்ரமः (சூ-33)**

க்ஷணப்ரதியோகி என்பது வஸ்துவைக் குறிக்கிறது. (ஸ்வரூப நிர்தேச:) க்ஷணத்தை எது நிரூபிக்கிறதோ அது க்ஷணப்ரதியோகி எனப்படுகிறது. இம்மாதிரி க்ஷணிக பரிணாமக்ரமம் கொள்ளத்தகுந்தது. அதற்கு பிரமாணம் பரிணாம அபராந்த நிர்க்ராஹ்ய:. அதாவது மிருத்தில் (மண்) பிண்டம், கடம், கபாலம், தூள், பொடி, மண்கள், மண் அணுவாதல் இம்மாதிரி பிரத்யக்ஷ பரிணாமத்தில் முன் ஆரம்பம் பிண்டம் பின் (அபராந்தம்) முடிவு அணு வரை முன்பின் அவதி கொள்வதான கிரமம் நிஷ்கர்ஷை எடுத்துக்கொள்ள வேண்டியது ஆகிறது என்று கருத்து.

गुणानां परिणामक्रमसमाप्तौ किं फलिष्यतीत्यत्राह—

குணங்களின் பரிணாமக்ரம ஸமாப்தியில் என்ன பலன் என்று கூறுகிறார் :—

**पुरुषार्थशून्यानां गुणानां प्रतिप्रसवः कैवल्यं स्वरूपप्रतिष्ठा वा चितिशक्तिरिति ॥ ३४ ॥**

कृतभोगापवर्गाणां कार्यकारणात्मनां गुणानां प्रधाने प्रतिप्रसवः प्रलयः कैवल्यम्, चितिशक्तिः कूटस्थनित्या शुद्धासङ्गचित्स्वभावा शक्तिः स्वरूपप्रतिष्ठा पुनर्बुद्ध्यादिसंबन्धविधुरा वा कैवल्यं भवतीत्यतिशोभनम् । इतिशब्दः शास्त्रपरिसमाप्तिद्योतनार्थः ॥

**புருஷார்த்த சூன்யானும் குணனும் ப்ரதிப்ரஸவ, கைவல்யம், ஸ்வரூபப்ரதிஷ்டா வாசிதி சக்தி: இதி (சூ-34)**

செய்யப்பட்ட கார்யமாகிய போக-அபவர்க்கமான, கார்ய காரண ஆத்மகமான குணங்களை ப்ரதானத்தில் (மூலப்ரகிருதியில்) பிரதிலயம் பண்ணுவது கைவல்யம், சித்ஸக்தி:, கூடஸ்த, நித்யா, சுத்தா, அஸங்க: சித் ஸ்வபாவ:, சக்தி: ஸ்வரூபப்ரதிஷ்டை, மறுபடி புத்தி முதலிய ஸம்பந்த ரஹிதம் (இல்லை) கைவல்யம் என்பது அதிசோபனமானது- மங்களகரமானது. இம்மாதிரி சாஸ் திரம் முடிவுறுகிறது என்று குறிப்பிடுகிறது.

**ஸ்ரீதத் தேவார்ப்பணம் அஸ்து.**

**यत्कृपापोतमासाद्य समुत्तीर्णो भवार्णवात् ।**
**नमोऽस्तु तस्मै गुरवे स्वाविद्याध्वान्तभानवे ॥ १ ॥**

எவருடைய கிருபையாகிற அருளைக்கொண்டு ஸம்ஸார ஸாகரத்தை தாண்ட முடிந்ததோ, தன்னுடைய அவித்தை என்ற இருளைப்போக்குகிற சூரியனாகிய அந்த ஸத்குரு வுக்கு நமஸ்காரம் பண்ணுகிறேன். (1)

**क्वाहं क्व योगसरणिर्गहनार्था तथाप्यहम् ।**
**श्रीगुरोः कृपयाकार्षं वृत्तिं योगसुधाकरम् ॥ २ ॥**

அல்பமான அறிவு கொண்ட யான் எம்மாத்திரம், யோகம் என்ற அடர்ந்த பொருளுடன் கூடிய சாஸ்திரம் எங்கே. அப்படியிருந்தாலும் ஸ்ரீஸத்குரு கிருபையால் யோக சுதாகரம் என்ற விருத்தியை செய்து முடித்தேன். (2)

**फणीन्द्रसूत्रग्रथिता मद्वाङ्मौक्तिकमालिका ।**
**समर्प्यते मया श्रीमद्गुरोश्चरणपङ्कजे ॥ ३ ॥**



நாகேந்திரனாகிய பதஞ்சலியால் செய்யப்பட்ட சூத்திர மும், என் வாக்காகிய முததுக்களால் கோர்க்கப்பட்டது மான மாலையை ஸ்ரீமத் குருபாத கமலங்களில் என்னால் ஸமர்ப்பிக்கப்பட்டது. (3)

इति श्रीपरमहंसपरिव्राजकाचार्यश्रीपरमशिवेन्द्रसरस्वती-
पादाब्जसेवापरायणेन श्रीसदाशिवेन्द्रसरस्वत्या
विरचितायां श्रीमत्पतञ्जलिप्रणीते
योगशास्त्रे सांख्यप्रवचनापरनामधेये
योगसुधाकराभिधायां वृत्तौ
**कैवल्यपादः**
समाप्तः ॥

இம்மாதிரி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்ய
ஸ்ரீபரம சிவேந்திர ஸரஸ்வதி ஸேவாபர
னான நெரூர் ஸ்ரீஸதா சிவேந்திர
ஸரஸ்வதியினால் செய்யப்பட்ட
யோகசுகாதர விருத்தியில்
**கைவல்ய பாதம்**
முடிவுற்றது.

**சுபமஸ்து.**



श्रीः

योगसुधाकरो नाम

# योगसूत्रवृत्तिः

(द्राविडानुवाद विवरणोपेता)

[महर्षि पतञ्जलिप्रणीत योगसूत्रविवृतिः]

✶

अनुवादक :

योगिवर्य श्री सुब्बराय शर्मा

✶

प्रकाशक :

श्री एल. रामार्याः

कल्पात्ति, पालक्काड

First Edition 1984

Copies can be had :

NATHAN'S CAFE
95 USMAN ROAD
T'NAGAR, MADRAS-600 017

YOGI R. SUBBARAYA SARMA
11, WEST METTU STREET
KUMBAKONAM, TAMIL NADU

*Price Rs. 20/-*

Printed at :

NATHAN PRINTING PRESS
10, South Mada Street
Mylapore, Madras-600 004.

ஸ்ரீ:

யோகஸுதாகரம்

என்கிற

# யோகஸூத்ர வ்ருத்தி

[தமிழாக்கம், தமிழ் விரிவுரையுடன்]

**[மாமுனி பதஞ்சலியின் யோகஸூத்ர விளக்கவுரை]**

★

தமிழாக்கம், விரிவுரை :

**யோகி சுப்பராய சர்மா அவர்கள்**

★

வெளியிடுவோர் :

**ஸ்ரீ எல். ராமய்யர்**
**கல்பாத்தி, பாலக்காடு.**

முதல் பதிப்பு—1984

புத்தகம் கிடைக்குமிடம் :

நாதன்ஸ் சுபே
95, உஸ்மான் ரோடு
தி' நகர், சென்னை-17

யோகி R. சுப்பராய சர்மா
11, மேற்கு மேட்டுத் தெரு
கும்பகோணம், தமிழ்நாடு

விலை ரூ. 20/-

அச்சிட்டோர் :

நாதன் பிரிண்டிங் பிரஸ்
10, தெற்கு மாட வீதி
மயிலாப்பூர், சென்னை-4.



ஸ்ரீ சதாசிவ ப்ரம்மேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள்

॥ श्री चन्द्रमौलीश्वराय नमः ॥

श्रीशङ्करभगवत्पादाचार्य परम्पराऽऽगत

श्रीकाञ्चीकामकोटिपीठाधिपति

# जगद्गुरु-श्रीशङ्कराचार्यस्वामिनाम्

# श्रीमठम् संस्थानम् काञ्चीपुरम्

{ கர்னூல்
29-9-83

'ஷட் தரிசனம்' என்று ப்ரஸித்தமான ஆறு சாஸ்திரங்களில் ஒன்ருன யோக சாஸ்திரத்தை விளக்கும் பொருட்டு பதஞ்சலி மாமுனிவரால் இயற்றப்பட்ட ''யோகஸூத்ரம்'' என்னும் நூலுக்கு சுமார் 150 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த **ஸ்ரீ ஸதாசிவப்ரம்மேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள்** ஸம்ஸ்கிருத மொழியில் ''யோகஸுதாகரம்'' என்னும் வ்யாக்யானம் எழுதி பேருபகாரம் செய்துள்ளார். ஸமஸ்கிருத மொழி பயிலாதவர்களின் நன்மைகளைக் கருதி யோகி **சுப்பராய சர்மா** அவர்களால் தமிழ் மொழியில் தொகுக்கப்பட்டதை அவரது பிரிய சிஷ்யரான பாலக்காடு ஸ்ரீ எல். ராமய்யர் அவர்கள் அதனை அச்சிட்டு வெளியிட இருப்பதைக் கண்டு ஸந்தோஷிக்கிறோம்.

மக்கள் அனைவரும் விரும்பும் தர்ம, அர்த்த, காம, மோக்ஷம் என்ற நான்கு புருஷார்தங்களுக்குள் மிக முக்ய மானது மோக்ஷமேயாகும். மோக்ஷத்திற்கு ஞானம் நேர் காரணமானாலும், சித்த சுத்தி, வைராக்யம், புலனடக்கம் முதலியவை தொடர் காரணமாகும். அந்த வரிசையில் மனக்கட்டுப்பாடு எல்லாவற்றிற்கும் மூலகாரணமாக உள்ளது. அத்தகைய மனக்கட்டுப்பாட்டை விளக்கும் யோகஸூத்ரம் योगः चित्तवृत्तिनिरोधः என்று தொடங்குகிறது. பல இடங்களில் செல்லும் மனதைத்தடுத்து ஓர் இடத்தில் செலுத்துவதுதான் யோகம் என்று பெயர். அத்தகைய யோகாப்யாஸத்தை விளக்கும் இந்நூல் மக்கள் அனைவருக்கும் நன்கு பயன்பட்டு, அவர்களும் யோகிகளாக மலர்ந்து இன்புறட்டும் என்று ஆசீர்வதிக்கிறோம்.

**நாராயணஸ்மிருதி:**

உ

ஸ்ரீ குருப்யோ நம:

# முன்னுரை

ஸ்ரீ ஸத்குரு பரம ஹம்ஸ பிக்ஷு— ஸ்ரீ சிவப்ரகாச ஆனந்தகிரி மஹாராஜர் பாதாரவிந்தங்களில் ஹ்ருதய பூர்வம் நமஸ்காரம் பண்ணி எழுதுவது:- ஆத்மாவைக் காண்பித்துக் கொடுப்பதால் ''தர்சனம்'' என்று பெயர் கொண்டது ஆறுவகை நூல்கள். காண்பித்துக் கொடுக்கிறது என்பதற்கு ஸாக்ஷாத்காரம் பண்ணிக் கொடுக்கிறது என்று கருத்து. அவைகள் : (1) ஸாங்க்யம், (2) யோகம், (3) நியாய்யம், (4) வைசேஷிகம், (5) பூர்வ மீமாம்ஸை, (6) உத்தரமீமாம்ஸை. மேற்கூறிய ஆறும் முறையே கபிலர், பதஞ்சலி, கௌதமர், கணாதர், ஜைமினி, வ்யாஸர் என்ற ஆறு மஹரிஷிகளால் ஸூத்ர ரூபமாக செய்யப்பட்டுள்ளது. ஸூத்ரங்கள் பொதுவாக ஸூக்ஷ்மமாயும் அல்ப அக்ஷரங்களைக் கொண்டதும், கொஞ்சம் கூட (எள்ளளவு கூட) சந்தேகத்துக்கு இடமில்லாததும், ஸாரத்தை அப்படியே கிரகித்து அளிக்கின்றனவாயும், விஸ்தாரமாகப் பொருள் உள்ளனவாயும் இருப்பதால் ஸுலபமாகப் புரிந்துகொள்ள இயலாதது. இதற்கு ஒரே ஒரு மார்க்கம்தான் உண்டு (வழி). அதாவது அதை அளித்த மஹரிஷியின் அனுக்கிரகத்தைக் கொண்டும், அதை வ்யாக்யானம் செய்து கொடுத்த மஹான்களின் ஆசீர்வாதத்தைக் கொண்டும் புரிந்து அப்யாஸம் செய்தால் ஸாக்ஷாத்காரம் அடைவது நிச்சயம் (ஸத்யம்). ''கௌந்தேய ப்ரதிஜானீஹி ந மே பக்த: ப்ரணஸ்யதி'' (கீதை வாக்கியம் பிரமாணம்). ''அனப்யாஸ வதஸ்சைவ வ்ருதா கோஷ்ட்யா ந ஸித்யதி'' என்பது உபநிஷத் வாக்யம்.

இப்போது முதல் தர்சனமான கபில மஹர்ஷியால் சொல்லப்பட்ட ஸாங்க்யத்தைச் சற்று விளக்கி விட்டு பின்பு இரண்டாவதான பதஞ்சலி மஹர்ஷியால் சொல்லப்பட்ட யோகத்தை சுருக்கமாகச் சொல்லி இந்த முன்னுரையை முடிக்க உத்தேசம். ஸங்க்யை என்றால்

எண்ணிக்கை. பகவான் கபிலமஹர்ஷி, ஸாங்க்யதர்சனம் செய்து, தத்துவங்களை எண்ணிக் கொடுத்து கருணையுடன் காண்பித்துள்ளார். அதாவது அஜம் என்ற தத்வம். மூலப்ரகிருதி என்ற பெயர் கொண்டது. (லோஹித - சுக்ல - கிருஷ்ணம் அதாவது சிவப்பு - வெள்ளை - கருப்பு) தத்வம் ஒன்று. அது எப்போதும் காரணமாகவே உள்ளது. மூலகாரணம் ஒருபோதும் காரியமாக ஆகாதது. தனக்கு ஒரு காரணமும் இல்லாதது. அதாவது எப்போதும் உள்ளது-நித்யம்-உண்டாகாதது என்று பொருள்.

**இரண்டாவது**— 7 தத்வங்கள். பிரகிருதி விகிருதி எனப் பெயர் கொண்டது. காரணமாயும். காரியமாயும் உள்ளவைகள். அதாவது மஹத்-1, அஹங்காரம்-2, சப்தம்-3, ஸ்பர்சம்-4, ரூபம்-5, ரஸம்-6, கந்தம்-7. (ஆகாச, வாயு, தேயு, அப்பு, பிருத்வி இவைகளின் ஐந்து தன்மாத்திரைகள்) (மஹத், அஹங்காரம், பஞ்ச தன் மாத்திரை என்பன-7 தத்வங்கள்)

**மூன்றாவது**— விகிருதி என்ற 16 தத்துவங்கள். இவைகள் எப்போதும் காரியமாக உள்ளது. ஒன்றுக்கும் காரணம் ஆகாதது. அதாவது: மனது -1, ஞானேந்திரியம்-5, கர்மேந்திரியம்-5, மஹாபூதம்-5. ஆக பதினாறு (16).

**நான்காவதான புருஷன்** என்பது ஒரு தத்வம். இது ப்ரகிருதியும் அல்ல விகிருதியும் அல்ல. ப்ரகிருதி, விக்ருதி இரண்டும் அல்லாதது. ஒன்றுக்கும் காரணமாகவோ காரியமாகவோ ஆவதில்லை. **ஆக. 1+7+16+1=25 தத்வம்.** இது ஸாங்க்யம் என்ற **தத்துவ விவேகம்.**

பிறகு **தத்துவஜயம் யோகம்** என்பதாகும் இரண்டாவது தர்சனம். இந்நூல் பாதஞ்சல யோக சூத்ரம் என்று பெயர் கொண்டது. மொத்தம் 197 சூத்ரங்கள் உள்ளது. நான்கு பாதங்கள் உள்ளது. முதலாது ஸமாதி பாதம் (சூத். 51), இரண்டாவது ஸாதன பாதம் (சூத். 55), மூன்றாவது விபூதி பாதம் (சூத். 57), நான்காவது கைவல்ய பாதம் (சூத். 34) இந்த சூத்ரங்களுக்கு



மஹான் நெரூர் **ஸ்ரீ ஸதாசிவப்பிரம்மேந்திர ஸரஸ்வதிகள்** (ஸ்ரீ பரமசிவேந்திர ஸ்ரஸ்வதிகள் சிஷ்யாள்) ''யோக சுதாகரம்'' என்ற வ்யாக்யானம் ஸம்ஸ்கிருதத்தில் மிகத் தெளிவாகவும் சுருக்கமாகவும் அனுக்கிரஹம் உள்ளதாகவும் செய்திருக்கிறார்கள். அதன் தமிழ் மொழிபெயர்ப்பே இப்புத்தகம். முதலாவதான ஸமாதி பாதத்தில் உத்தம அதிகாரியான ''ஸமாஹித சித்தம்'' உள்ளவனுக்கு சித்த நிரோதம் சொல்லி த்ரஷ்டாவைக் காண்பித்துக் கொடுத்துள்ளார். பிறகு 48-வது சூத்ரத்தில் ரிதம்பரா பிரக்ஞை காட்டி தர்மமேகஸமாதி ரூபம் சொல்லி நிர்பீஜஸமாதியுடன் முடிக்கிறார். இரண்டாவதான ஸாதன பாதம், வ்யுத்தித சித்தம் உள்ள மத்திம அதிகாரிக்கு தபஸ், ஸ்வாத்தியாய, ஈஸ்வரப்ரணிதானரூப க்ரியாயோகம் சொல்லி, 26-வது சூத்ரத்தில் விவேகக்யாதி சொல்லி, 27-வது சூத்ரத்தில் ஜீவன்முக்தனது பிரக்ஞா வைபவம் சொல்லி முடிக்கிறார். ஸாதனபாதம் 28-வது சூத்ரம். பின்பு அதம அதிகாரியான, மேலும் அதிகமான வ்யுத்தித சித்தம் (விக்ஷேபம்) உள்ளவனுக்கு அஷ்டாங்க யோகம் அதாவது யம, நியம, ஆஸன, ப்ராணாயாம, ப்ரத்யாஹார, தாரணா, த்யான, ஸமாதி சொல்லுகிறார். ஸாதன பாதம் ப்ரத்யாஹார அப்யாஸத்துடன் (சூத். 55) முடிகிறது. மூன்றாவதான விபூதிபாதம் தாரணா அப்யாஸத்துடன் ஆரம்பம் ஆகி ஸம்யமன ஞானம் சொல்லி, 37-வது சூத்ரத்தில் ஸ்வார்த்த ஸம்யமம் துவாரா புருஷ ஞானப் ப்ராப்தி (துரியம்) சொல்லுகிறார். பிறகு சூத். 51-ல், ஸத்வ புருஷன் அன்யதாக்யாதி அடையும் வழி சொல்லி (அப்யாஸம் சொல்லி) விசோகா அனுபவம் அதாவது (ஆத்மவித் சோகம் தரதி தரதி சோகம் ஆத்மவித்) அனுபவம் காண்பிக்கிறார். 52-வது சூத்ரம் ப்ரம்மவித் அனுபவம். சூத். 53-ல் ப்ரம்மவித் அனுபவத்துக்கு முன் உண்டாகக்கூடிய அந்தராயம் கூறி எச்சரிக்கை செய்கிறார். 57-வது சூத்ரம் கைவல்யம் சொல்லி 3-ம் பாதம் முடிகிறது. பிறகு 4-ம் பாதமான கைவல்ய பாதம் ஆரம்பித்து ஜன்மனா உண்டாகக் கூடிய ஸித்தி கூறி 29-வது சூத்ரத்

தில் தர்மமேக ஸமாதி அனுபவம் கூறுகிருர். விவேகக்யாதி - துரியம் - அக்ஷரம் - கூடஸ்தன் இவையெல்லாம் ஒரே பொருளைக் குறிக்கும் பதங்கள். ப்ரஸங்க்யானம் என்பதும் இதை ஒத்துள்ளதுதான். (விசோகா சித்தி) இவ்வளவு அனுபவம் உண்டாளுலும் வ்யுத்தானம் உண்டு. ஸர்வதா - ஸர்வாத்மனு - விவேகக்யாதியாகிய தர்மமேகத்தால் தான் க்லேச கர்ம நிவர்த்தி உண்டாகி, கிருத கிருத்யத்வம் அடைந்து ஸ்வரூபப் பிரதிஷ்டை அடைகிருன் (ஜீவன்முக்தி) கைவல்ய பாதம் முடிவு. (34 சூத்.)

இத்தமிழ் மொழிபெயர்ப்பு எனது ஸகாவும் அத்யந்த பக்தருமான பாலக்காடு ஸ்ரீ எல். ராமய்யரின் வேண்டுகோளுக்கு இணங்கி செய்யப்பட்டது. இந்த ''யோக சுதாகரம்'' நூலுக்கு வேறு தமிழ் மொழிபெயர்ப்பு இல்லை. எனக்கும் ஸம்ஸ்கிருதத்திலும், தமிழிலும் நல்ல பாண்டித்யம் கிடையாது. இருந்தபோதிலும் சிநேகிதரின் விருப்பத்துக்கு கட்டுப்பட்டு, ஸத்குருவின் மேல் பாரத்தைப் போட்டு எழுதி ஒருவாறு முடித்துவிட்டேன். எனது ஸத்குருநாதனும் இந்த யோகசாஸ்திரமானது தற்காலம் சுய நலரூபிகளான ஜனங்கள் வசம் சிக்கிக் கொண்டு, பல வழிகளிலும் துர்வினியோகம் ஆவதாகக் கருதியும், ஸாமான்ய பூமியிலிருந்து வைதிக விசேஷ பூமிக்கு வர வேண்டி ஈஸ்வர ஸம்மத பூர்வகம் ஸங்கல்பித்திருப்பதாலும் இதை திரிகரண சுத்தியுடன் அவர் பாதகமலங்களில் ஸமர்ப்பித்துள்ளேன்.

இங்ஙனம்

**ராஜகோபால சுப்பராய சர்மா**

கும்பகோணம்.

ஓ

श्रीगुरुभ्यो नमः

## முகவுரை

நமது மூச்சுக்காற்றுக்கும் மனப்போக்குக்கும் பிரிக்க முடியாத தொடர்புள்ளது. இதை உணராதவர்களும் உண்டு. மூச்சுக்கும் எண்ணங்களுக்கும் உள்ள தொடர்பை புரிந்து கொண்ட பெருந்தகைகள் பாரத பூமியில் இருந்திருக்கின்றனர். இந்த உண்மையை உணர்ந்து எண்ண அலைகளால் சிதருமல் அமைதியை நேரில் கண்டு களித்தவர்களை யோகிகள் என்பர்.

பதஞ்சலி மாமுனிவர் 'சொல்' பிழையை போக்கும் பொருட்டு இலக்கண நூலாகிய வ்யாகரண மஹாபாஷ்யம் இயற்றினர். 'நோயற்ற வாழ்வே குறையற்ற செல்வம்' என்பதற்கேற்ப ஆரோக்யமாய் இருக்கும் பொருட்டு வைத்ய சாஸ்திரத்தை விளக்க சரகஸம்ஹிதை என்னும் நூலையும், मन एव मनुष्याणां कारणं बन्धमोक्षयोः என்ற சான்ருேர் வார்த்தைகளுக்கிணங்க, மனக்கட்டுப்பாடு எல்லாவற்றிற்கும் மூல காரணமானது என்பதை உணர்ந்து, உளத் தூய்மை அடைய, 'யோக ஸூத்ரம்' - என்ற நூலையும் எழுதி பேருபகாரம் செய்துள்ளார்.

ஆன்மா புறவாயிலாக ஐம்புலன்களுக்குரிய இன் பொருள்களை நுகர்ந்து களிப்பெய்தினும் அந்த இன்பம் நிலையற்றதென்பது யாவரும் அறிந்த உண்மை.

''யோகம்'' என்பது பரமாத்மாவோடு ஜீவனை ஒன்றுபடுத்துவது என்ற பெரும் பொருள் கொண்டுள்ளதோடு योगः कर्मसु कौशलम् என்றும், समत्वं योग उच्यते என்றும் கீதாசார்யன் சொல்லியபடி ஆன்மாவில் புலன்களையும்

பிறகு ஆன்மாவையும் கட்டுப்படுத்தி பரமாத்மானுபவத்தை உண்டாக்க உதவும் வழியாகவும் அமைந்திருக்கிறது.

உள்ளத்தைக் கட்டுப்படுத்துவதெங்ஙனம் என்பதற்கு விடையளிக்கிறது பதஞ்சலி மாமுனி இயற்றிய நான்கு பாதங்கள் கொண்ட யோக ஸூத்ரம்.

ஒரு நிலையில் இல்லாமல் அங்கும் இங்கும் அசைந்து கொண்டிருக்கும் குணமுடையது மனம். அதை எவ்விதம் கட்டுப்படுத்துவது என்ற வினா எழுந்தபொழுது கீதாசார்யர் விடையளித்தார் - अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते 'பயிற்சியின் முதிர்ச்சியாலும் பற்றற்ற நிலையாலும் மனதைக் கட்டுப்படுத்த வேண்டும்' என்றார். மனதின் செயல்முறைகளை கட்டுப்படுத்துவது கடினமாகத் தோன்றினாலும் பயிற்சி பயனளித்துவிடும்.

பயிற்சியைப் பகிர்ந்தளிக்கிறார் இங்கு பதஞ்சலி. அதை விளக்கி பக்வமாகப் படைத்துத் தருகிறார் **ஸதாசிவ ப்ரம்மேந்திரர்.** பாமரர்களுக்கு பரம கருணையோடு விருந்தளிக்கிறார் எளிய தமிழில் யோகி சுப்பராய சர்மா அவர்கள். இப்படி இந்நூல் யோகத்தின் ஸாரத்தை பலருக்கு, அதிலும் பாமரர்களுக்கு அளிப்பதில் முதலிடம் பெறுகிறது.

ஸநாதன தர்மம். அது ஒரு கார்யாலயம். எல்லோருக்கும், எப்பொழுதும் அதன் வாசல் திறந்திருக்கும். ஆறாத்துயரத்தில் ஆழ்ந்து தவிக்கும் ஆன்மாவுக்கு ஆறுதல் அளிக்க ஆவலோடு ஆறு அரும்பெரும் முனிவர்கள் எப்பொழுதும் விழித்துக்கொண்டு காத்திருக்கிறார்கள். सांख्य, न्याय, वैशेषिक, योग, मीमांसा, वेदान्त என்ற ஆறு தர்சனங்களை அளித்தவர்கள். कपिल, गौतम, कणाद, पतञ्जलि, जैमिनि व्यास, என்று அவர்களை முறையே அழைப்பதுண்டு. கண்ணாடி தெளிவாகப் பொருளை விளக்கும். கண்ணாடி போல் விளக்கிக் கூறுகிறது அறுவர்களது படைப்பும்.



ஆற்று நீர் பல வழிகளைக் கடந்து கடைசியில் ஆழ் கடலை அடைவது போல் இந்த தர்சன ஆறுகள் ஆறும் மாறுபட்ட வழிகளில் செயல்பட்டு கடைசியில் மோக்ஷத்தை அடைவிக்கிறது. அறத்திலிருந்து உதித்த இந்த ஆறு ஆறுகளும் துயரப்படுபவரின் நிலைக்கொத்தவாறு ஈர்க்கப்பட்டு மனித இனத்தை மாறுபட்ட வழிகளில் அழைத்துச் சென்று நிலையான ஆனந்தக்கடலில் இரண்டறக் கலந்து ஒன்றுபட வழி வகுக்கிறது.

தற்காலச் சூழ்நிலைக்கு மிகப் பொருத்தமாக அமைந்திருக்கும் தர்சனம் பதஞ்சலீ முனிவரின் யோக ஸூத்ரம். இன்றைய ஸமுதாயத்தில் அமைதி நிலவ அவரது அறிவுரைகள் மிகவும் தேவை. புலன்களை கட்டுப்படுத்தி, மனதை ஒருநிலைப்படுத்தி, காணும் பொருள்கள் அத்தனையும் 'ப்ரம்மம்' என்ற அறிவு ஏற்பட இந்நூலல்லவா உயர்ந்த கருவி. 'யமம்' - என்னும் ஸாதனத்தை விளக்கும் அறிவுரை இதோ—

सर्वं ब्रह्मेति वै ज्ञानात् इन्द्रियग्रामसंयमः
यमोऽयमिति संप्रोक्तोऽभ्यसनीयो मुहुर्मुहुः ॥

கருத்தலைகள் ஐந்து வகைக்கு உட்பட்டவை; அவற்றின்மீது ஆன்மாவுக்கு ஆட்சி ஏதும் இல்லை என மயங்கியவர்கள் பலர் உளர். இக்கருத்துக்களால் விளையும் விபரீதங்களை விலக்க வழியே இல்லை என்று நினைப்பது சரியல்ல. யோகநூலில் கூறும் முறைகளை பின்பற்றினால் இத்துறையில் வெற்றி காண்பது ஸாத்யம் என்பது யோகஸூத்ரங்களால் கிடைக்கும் பலன் ஆகும். இந்த யோக ஸூத்ரங்கள் உள உயர்வுக்குக் காரணத்தையும், அக்காரணத்தைப் புரிந்துகொண்டு ஆவன இயற்றுவதற்கான வழிமுறைகளையும் வகுக்கிறது.

எனினும் மிகச்சுருக்கமாய் உள்ள பதஞ்சலி யோக ஸூத்ரங்களை அறிவு முதிர்ச்சி படைத்தவர்தாம் புரிந்து

கொள்வர் எனத்தெரிந்த பலர் அந்த ஸூத்ரங்களின் ஆழ்ந்த கருத்தைத் தமது வ்யாக்யானம் என்றும் உரைகளைக் கொண்டு விளக்கத் தலைப்பட்டனர்.

யோக சித்திகளை நேரிடையே புலப்படுத்திய சற்றேசுமார் நூற்றி ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னம் வாழ்ந்த ஸ்ரீ சதாசிவப்ரம்மேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் யோக ஸூத்ரங்களது உட்கருத்தை உள்ளங்கை நெல்லிக்கனியாக விளக்கும் நோக்குடன் ''யோகஸுதாகரம்'' என்னும் சுருக்கமான கண்ணாடி போன்ற விருத்தி ஒன்றை இயற்றி மாந்தருக்கு இணையற்றதொரு பணியை ஆற்றியுள்ளார். அதையும் அவர் ஸம்ஸ்கிருத மொழியிலேயே ஆக்கியதைக் கண்டு அம்மொழியை பயிலாதவர்களும் யோக அப்யாஸ ஸாதனைகளை அடையும் பொருட்டுத் தமிழ் மொழியிலும் விளக்கமான, தெளிவான ஓர் மொழி பெயர்ப்பைக் கண்டெடுத்து தொகுத்த யோகி சுப்பராய சர்மா அவர்களின் அத்யந்தப்ரிய சிஷ்யர் பாலக்காடு வாஸியான ஸ்ரீ எல். ராமய்யர் தனது குருபக்தியின் காணிக்கையாக இம்மொழிபெயர்ப்பை அச்சிட்டு மக்கள் அனைவருக்கும் பயன்படும்படி செய்துள்ளார். இந்நூலைக் காணும் வாய்ப்புள்ள ஜனங்கள் தாமும் யோகிகளாக மலர்ந்து இன்புறுவர் என நம்புகிறோம்.

நல்லோர்களின் அடிமை

**அடையபலம் ராமகிருஷ்ண தீக்ஷிதர்**
**மீமாம்ஸா விசாரத, சிரோமணி**
**ஓய்வுபெற்ற ஸம்ஸ்கிருத ஆசிரியர்**
**வில்லிவாக்கம், சென்னை**

1—10—1983

## பதிப்புரை

ராமாயணத்தில் ஒரு நிகழ்ச்சி. இலங்கையை அடைய கடலைக் கடக்க வேண்டும். அதற்குப் பாலம் கட்ட வேண்டும். வானரங்களின் முயற்சியில் அணைத் தயாராகிக் கொண்டிருந்தது. அணில் ஒன்று அணைக்கட்டும் பணியில் தன் பங்கும் இணைய வேண்டும் என்று எண்ணியது. செயல்பட்டது. உடலை நீரில் மூழ்கடித்து மணலில் புரண்டு, உடலில் பற்றிக்கொண்டிருக்கும் மணலை அணை மேல் உதறி உதவி புரிந்து விட்டதாக ஒருவாறு நிம்மதி அடைந்தது.

—இது கர்ண பரம்பரையாக நான் கேட்ட கதை.

அணில் அளவு கூட எனக்கு அறப்பணி செய்ய ஆற்றல் இல்லை. நான் மிக எளியவன். குருபக்தி எனக்கு உணர்வு அளித்து செயல்பட வைக்கிறது. காஞ்சி மாமுனிவரின் சரணாரவிந்தங்களில் அடிபணிவதுதான் எனக்குத் தெரிந்த தத்வம். அவரது க்ருபாகடாக்ஷமே இந்நூலின் வடிவமைப்புக்குக் காரணம். பிரம்மஸ்ரீ ராமகிருஷ்ண தீக்ஷிதர் அவர்களின் ஒத்துழைப்பும், நாதன் அச்சகத்தாரின் அயராத உழைப்புமே இத்தொகுப்புக்குப் பெருமை கூட்டிக் கொடுத்துள்ளது என்று நான் எண்ணுகிறேன். இந்நூல் நன்றாக அச்சேறி வெளிவரக் காரணமான நாதன் அச்சகத்தாருக்கும், முகவுரை அளித்து நூலின் பெருமையை எடுத்துரைத்து நூலுக்கு அழகு சேர்த்த பிரம்மஸ்ரீ ராமகிருஷ்ண தீக்ஷிதர் அவர்களுக்கும் எனது நன்றி என்றும் உண்டு. குருவின் நினைவோடு இந்நூலை பரமாசார்யாளின் சரண கமலங்களில் ஸமர்ப்பித்து, எனது 'மனமலத்தை' அகற்றி அனுக்ரஹிக்கும்படி ப்ரார்த்திக்கிறேன்.

இப்படிக்கு விதேயன்

**எல். ராமய்யர்.**

# பொருளடக்கம்

உ

श्री गुरुभ्यो नमः

## योगसुधाकरो नाम

# योगसूत्रवृत्तिः

## யோகஸுதாகரோ நாம

# யோகஸூத்ரவிருத்தி:

## ஸமாதிபாத: 1

यद्भावनादवापीयं प्रत्यक्चितिरनामया ।
क्लेशकर्माद्यसंस्पृष्टं तमीशं कंचनाभजे ॥ १ ॥

श्रीमत्पतञ्जलेस्तस्य पदद्वन्द्वमनिन्दितम् ।
वन्दे येन मनःकायवाचां शुद्धिरकार्यसौ ॥ २ ॥

विद्यारत्नं मया लब्धं यत्कृपापारवारिधेः ।
वन्दे तान्विबुधैर्वन्द्यान्वन्दकानन्ददान्गुरून् ॥ ३ ॥

श्रीमद्देशिकवक्त्राब्जान्निशम्याथ विलोड्य ताम् ।
फणीन्द्रभणितेः काचिद्वृत्तिरारभ्यते मया ॥ ४ ॥

எந்த பாவனையால் அழிவில்லாத பிரத்யக்சேதனன் அடையப்படுகிறானோ - க்லேச கர்மங்களால் தொடப்படாத அந்த ஈசனை நமஸ்கரிக்கின்றேன். (1)

ஸ்ரீமத் பதஞ்சலி மஹர்ஷியின் மாசு இல்லாத இரு பாதங்களை மனோவாக்கு காயம் ஆகியவை சுத்தி அடைவதன் பொருட்டு நமஸ்கரிக்கின்றேன். (2)

உ

श्री गुरुभ्यो नमः

# योगसुधाकरो नाम

# योगसूत्रवृत्तिः

## யோகஸுதாகரோ நாம

# யோகஸூத்ரவிருத்தி:

## ஸமாதிபாத: 1

यद्भावनादवापीयं प्रत्यक्चितिरनामया ।
क्लेशकर्माद्यसंस्पृष्टं तमीशं कंचनाभजे ॥ १ ॥

श्रीमत्पतञ्जलेस्तस्य पदद्वन्द्वमनिन्दितम् ।
वन्दे येन मनःकायवाचां शुद्धिरकार्यसौ ॥ २ ॥

विद्यारत्नं मया लब्धं यत्कृपापारवारिधेः ।
वन्दे तान्विबुधैर्वन्द्यान्वन्दकानन्ददान्गुरून् ॥ ३ ॥

श्रीमद्देशिकवक्त्राब्जान्निशम्याथ विलोड्य ताम् ।
फणीन्द्रभणितेः काचिद्वृत्तिरारभ्यते मया ॥ ४ ॥

எந்த பாவனையால் அழிவில்லாத ப்ரத்யக்சேதனன் அடையப்படுகிறானோ - க்லேச கர்மங்களால் தொடப்படாத அந்த ஈசனை நமஸ்கரிக்கின்றேன். (1)

ஸ்ரீமத் பதஞ்சலி மஹர்ஷியின் மாசு இல்லாத இரு பாதங்களை மனோவாக்கு காயம் ஆகியவை சுத்தி அடைவதன் பொருட்டு நமஸ்கரிக்கின்றேன். (2)

**வித்யா ரத்னமான இது எவருடைய கிருபாஸமுத்ரத்தால் என்னால் அடையப்பட்டதோ, வித்வான்களால் நமஸ்கரிக்கப்பட்ட அந்த குருக்களை நமஸ்கரிக்கின்றேன். (3)**

**ஸ்ரீமத் தேசிகனின் வதனாரவிந்தத்திலிருந்து கேட்டு விசாரம் பண்ணி நாகேந்திரனால் (பதஞ்சலி) செய்யப்பட்ட யோக சூத்ரத்துக்கு என்னால் விருத்தி (உரை) ஆரம்பிக்கப்படுகிறது. (4)**

इह खलु भगवान्पतञ्जलिः प्रेक्षावत्प्रवृत्त्यौपयिकं शास्त्रप्रतिपाद्यं दर्शयति—

இப்பொழுது பகவான் பதஞ்சலி யோகிகளுக்கு உபயோகமாகும்படி யோக சாஸ்திரம் பிரதிபாதிக்கும் தத்வத்தைக் காண்பிக்கிறார் :—

**अथ योगानुशासनम् ॥ १ ॥**

अत्र अथशब्दः आरम्भार्थः, अर्थान्मङ्गलार्थश्च । 'युज समाधौ' इति धातोर्योगः समाधिः; तस्यानुशासनं हैरण्यगर्भं शास्त्रमनुसृत्य शिष्यते व्याख्यायते ससाधनः सफलः समाधिरनेनेत्यनुशासनं शास्त्रम् । तथा च कस्मैचित्कैवल्यकामाय प्रतिपाद्ययोगप्रतिपादकं शास्त्रमारभ्यत इत्यक्षरार्थः । तत्र समाधिर्द्विविधः संप्रज्ञातोऽसंप्रज्ञातश्चेति । स च चित्तस्य धर्मः । चित्तं हि त्रिगुणात्मकत्वात्पञ्चभूम्युपेतम् । भूमयश्च—क्षिप्तं मूढं विक्षिप्तमेकाग्रं निरुद्धमिति । तत्र—रजसा विषयेषु क्षिप्यमाणं क्षिप्तम्; तमसा निद्रालस्यादिवृत्तिमन्मूढम्; ईषद्रजस्तमःसंस्पृष्टेन सत्त्वेन कादाचित्कध्यानयुक्ततया क्षिप्ताद्विशिष्टं विक्षिप्तम्; विधूतरजस्तमोमलेन शुद्धसत्त्वेनैकाग्रमेकतानम्; प्रशान्तसकलवृत्तिकं संस्कारशेषं निरुद्धम् । एवं च आद्यभूमित्रयपरित्यागेनावशिष्टभूमिद्वयोपेतस्य चित्तस्य समाधिद्वयं धर्म इति विवेकः ॥



**அத யோகானுசாஸனம்** (சூ-1)

இங்கு 'அத' ஸப்தம் ஆரம்பத்தின் பொருட்டாம். மங்களத்தை குறிப்பிடுவதாகவும் கொள்ள வேண்டும். ''யுஜ ஸமாதௌ'' என்பது தாது. அதனால் யோகம் என்பது ஸமாதி என்று பொருள். அந்த சாஸனம் ஹிரண்யகர்ப்ப சாஸ்திரத்தை அனுசரித்து சொல்லப்படுகிறது. ஸாதனத்தோடும், பலத்தோடும் ஸமாதி இந்த சாஸ்திரத்தால் வ்யாக்கியானம் செய்யப்படுகிறது. அப்படியே கைவல்யத்தை விரும்பும் அதிகாரிக்கு யோக சாஸ்திரம் பிரதிபாதிக்கப்படுகிறது என்பது பொருள். இங்கு ஸமாதி இரண்டு விதம். ஸம்பிரக்ஞாத: அஸம்பிரக்ஞாத: என்று. அது சித்தத்தின் ''தர்மம்''. சித்தமானது முக்குண வடிவம். ஐந்து பூமிகளுடன் (அவஸ்தை) கூடினது. பூமிகளாவன : க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்ரம், நிருத்தம் என்பன. ரஜோ குணத்தால் விஷயங்களில் தள்ளப்படுவது **க்ஷிப்தம்**. தமஸ்ஸால் நித்ரா ஆலாதிகளின் விருத்தி **மூடம்.** ஈஷத், ரஜஸ், தமஸ்ஸுடன் கூடிய ஸத்வம் கதாசித் த்யானத்துடன் கூடினதாய் க்ஷிப்தத்தைக் காட்டிலும் விசேஷமானது **விக்ஷிப்தம்.** ரஜஸ், தமஸ் மலங்கள் முழுவதும் போக்கப்பட்டு சுத்த ஸத்வமான ஏக விருத்தி **ஏகாக்ரம்.** ப்ரசாந்த ஸகல விருத்தியின் ஸம்ஸ்காரம் மிஞ்சியிருப்பது **நிருத்தம்.** இம்மாதிரியாக முதற் சொன்ன மூன்று பூமிகளை நன்றாக விட்டு, மிஞ்சிய இரண்டு பூமியுடன் கூடிய சித்தத்திற்கு இரண்டு ஸமாதிகள் தர்மம் என்று விவேகிக்கத் தகுந்தது.

अधुना द्विविधस्य समाधेः साधारणं लक्षणं लक्षयति—

இப்பொழுது இரண்டுவித ஸமாதிகளின் ஸாதாரண லக்ஷணம் கூறுகிறார் :—

